# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்சுவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 5 விளைச்சல் : 47 திருவள்ளுவர் ஆண்டு 2055, ஏப்பிரல் – 2024

## உள்ளே...











# தொழிலாளர் துறைக் கலைச்சொற்கள்

| | |
|---|---|
| Advisory board | அறிவுரைக் குழு |
| Apprentice | தொழில் பழகுநர் |
| Badli workmen | மாற்றுப் பணியாள் |
| Bonded labourer | கொத்தடிமைத் தொழிலாளி |
| Clinical laboratory | மருத்துவ ஆய்வுக் கூடம் |
| Compounder | மருந்து கலக்குநர் |
| Contract labour | ஒப்பந்தத் தொழிலாளர் |
| Creche | குழந்தைகள் காப்பகம் |
| Dhoby tools | வெளுப்பாளர் கருவிகள் |
| Door keeper | வாயிற் காப்பாளர் |
| Earthenware | மட்பாண்டம் |
| Hawker | கூவி விற்பவர் |
| Health officer | நல அலுவலர் |
| Home worker | மனைத் தொழிலாளர் |
| Job chart | பணிப்பட்டியல் |
| Labour welfare | தொழிலாளர் நல்வாழ்வு |
| Lighthouse | கலங்கரை விளக்கம் |
| Passenger service | பயணிகள் பணித்துறை |
| Protected workman | காப்பளிக்கப்பட்ட பணியாள் |
| Safety course | பாதுகாப்புப் பயிற்சி |
| Skilled workmen | செயல் திறத் தொழிலாளர்கள் |
| Store keeper | இருப்பறைக் காப்பாளர் |
| Transport service | போக்குவரத்துப் பணி |
| Unskilled workmen | செயல் திறமற்ற தொழிலாளர்கள் |
| Works committee | பணிக் குழு |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**

# சொல்வயல்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2055 மீனம் (பங்குனி)
ஏப்பிரல் – 2024

ஆசிரியர் : திருமதி க. பவானி
இயக்குநர் (மு.கூ.பொ.)

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN ): 978-81-958032-0-0

"என்னை நன்றாக இறைவன்
படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ்
செய்யுமாறே"

என்ற திருமந்திர திருமூலரின் வாக்கின்படி, தமிழ்வளர்ச்சித் துறையில் என்னை நன்றாக இறைவன் படைத்ததன் பொருட்டுத் தமிழாகிய இறைவனால் வளர்க்கப்பட்டு, இன்று தமிழ் அடிவேர்ச்சொல் வித்தகரான தேவநேயப் பாவாணர் அவர்களின் திருவடி பணிந்து, அவரால் வித்திட்டு வளர்க்கப்பெற்ற செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநர் (பொ.) ஆக 12.03.2024 அன்று முதல் பதவியேற்றேன்.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்குராகப் (பொ.) பதவி அளித்த தமிழ்வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசுச் செயலாளர் அவர்களுக்கும், தமிழ்வளர்ச்சித் துறை இயக்குநர் அவர்களுக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

என் பணியினைச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககப் பணியாளர்கள், தொகுப்பாசிரியர்கள், பதிப்பாசிரியர்களுடன் இணைந்து செவ்வனே செய்ய அனைவரும் ஒத்துழைப்பு நல்கிட அன்போடு கேட்டுக்கொள்கிறேன்.

திங்களுக்கொருமுறை வெளிவரும் இம்மின்னிதழின் ஆசிரியர் என்ற வகையில் இதன் பொறுப்பாசிரியர், இதழ்க்குழு உறுப்பினர்கள் அனைவருக்கும் வாழ்த்துகளைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இது மின்னிதழாக இருந்தாலும் அனைத்துத் துறை சார்ந்த, அலுவல் பணிகளுக்கும் இவ்விதழின் சொற்குவைச் சொற்களைப் பயன்படுத்த ஏதுவாகத் தொடர்ந்து முன்னேற்றங்களைக் காண்போம்.

## அகரமுதலி இயக்ககத்திற்குப் புதிய இயக்குநர்!
## திருமதி க. பவானி அவர்கள் பொறுப்பேற்பு!



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநராக (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் 12.03.2024 செவ்வாய்க்கிழமை முற்பகல் முதல் பொறுப்பேற்றுக்கொண்டார்.

இவர் 24 ஆண்டுகள் தமிழ்வளர்ச்சித் துறையில் பணியாற்றி, சேலம் மண்டிலத் துணை இயக்குநராகப் பதவி வகித்தவர். தற்போது சென்னை மண்டிலத் தமிழ்வளர்ச்சித் துறையின் துணை இயக்குநர் நிலையில் உள்ள இவர், தமிழ்வளர்ச்சி மற்றும் செய்தி (த.வ.2–1)த் துறை அரசாணை (வா.) எண்: 60, – 11.03.2024 ஆம் நாளிட்ட அரசாணையின்படி, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநராக முழுக்கூடுதல் பொறுப்பில் பதவிப் பொறுப்பினை ஏற்றுக்கொண்டார்.

# திருக்குறளில் மோனைத் தொடை


**புலவர் வெற்றியழகன்**

தலைவர்,

தொல்காப்பியர் தமிழ்ச் சங்கம்




**முன்னுரை :**

உலகில் மொத்தம் ஏழாயிரம் மொழிகள் தோன்றி – மூவாயிரம் மொழிகள் அழிந்து – இப்பொழுது நாலாயிரம் மொழிகள் இருக்கின்றன என்று மொழியறிஞர் கூறுகின்றனர். அவற்றுள் ஆறு மொழிகளை மட்டும் செவ்வியல் மொழிகள் எனத் தரம் பிரித்தனர். கிரேக்கம், எபிரேயம், இலத்தீனம், சமற்கிருதம், தமிழம் (தமிழ்) என்பன அவை.

செவ்வியல் மொழியான செந்தமிழில் முதல் இலக்கியம் திருக்குறளாகத்தான் இருக்கும் என்று பல்வேறு குறிப்புகளால் உணர்கின்றேன். அதன்பிறகு பல்வேறு இலக்கியங்கள் பல்கிப் பெருகி – ஒரு – கட்டுப்பாடின்றிச் சென்றதனைக் கண்ட தொல்காப்பியர் இலக்கண வரப்பு, வேலி, விளக்கு அமைத்துத் தமிழ்மொழியைக் காத்தார். தொல்+காப்பு+இயம்=தொல்காப்பியம். தொன்மையான எழுத்து மரபை, தொன்மையான சொல் மரபை, தொன்மையான தமிழர் வாழ்வியல் மரபைக் காக்கவே தொல்காப்பியத்தைப் படைத்தார். எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகிய அய்ந்து இலக்கணங்களைத் தொல்காப்பியத்தின்வழி நிறுவினார்.

திருக்குறள் – வாழ்வியல் நூல் ; அதே சமயத்தில் இலக்கண நூலுமாகும். தொல்காப்பியம் இலக்கண நூல்; அதே சமயத்தில் வாழ்வியல் நூலுமாகும். நாம் இப்போது பார்க்கப்போவது, "திருக்குறளில் மோனைத் தொடை" என்னும் பொருளை மட்டுமே.

யாப்பிலக்கண உறுப்புகள் – எழுத்து, அசை, சீர், தளை, பிணை, அடி, தொடை, பா, பாவினம் என்பன. இவற்றுள் தொடை – மோனைத் தொடை, எதுகைத் தொடை, முரண் தொடை, இயைபுத் தொடை, அளபெடைத் தொடை, அந்தாதித் தொடை, இரட்டைத் தொடை, செந்தொடை என எட்டுத் தொடைகள் உள்ளன. இவற்றுள் முதல் தொடையாகிய மோனைத் தொடையினைத் திருக்குறளில் திருவள்ளுவர் எவ்வாறு பயன்படுத்தியுள்ளார் என்பதைப் பார்க்கப் போகிறோம்.

**தொடை**

தொடை என்றால் தொடர்ச்சி என்று ஒரு பொருளும் – மாலை என்று மற்றொரு பொருளும் உண்டு. தொடை என்பது தொடுக்கப்பெறுவது. தொடுத்தல், ஒன்றோடு ஒன்றனைச் சேர்த்தலாகும். மலர்களை ஒன்றோடு ஒன்றாகச் சேர்த்து மாலையாக்குவதனைப் போன்று அடியோடு அடியினைத் தொகுத்தும் – சீரோடு சீரினைத் தொடுத்தும் – பாவாக்கப்பெறுவதே தொடையெனப்பெறும்.

நம் காலின் மேல் பகுதி உடம்புடன் தொடுக்கப்பெற்றிருப்பதனாலேயே அதற்குத் தொடை எனப் பெயர்.

யாப்பிலக்கண உறுப்பு வகையுள் இந்தத் தொடை உறுப்பு மிகவும் சிறப்பு வாய்ந்ததாகும். செய்யுளுக்கு இனிமையையும் இசை நயத்தையும் தொடர்ச்சியையும் உண்டாக்குவது இந்தத் தொடை என்னும் உறுப்பாகும்.

நினைவாற்றலை மிகுவிப்பதற்கும் செய்யுளின் தொடர்ச்சி விடுபட்டுப் போகாமலிருப்பதற்கும் ஒருகட்டுக்கோப்பினை உருவாக்கிச் சிறப்பைச் சேர்ப்பது இந்த உறுப்பேயாகும்.

**1. மோனைத் தொடை**

மோனைத் தொடை என்பது முதலெழுத்து ஒன்றிவருதலாகும். முதல் " முதன்மை " முனை " முகனை " மோனை என்று மருவி வழங்கப்பெறுகின்றது.

இந்த மோனை – அடிமோனை, சீர்மோனை என்னும் இரண்டு பெரும்பிரிவினைக் கொண்டது

உயிரெழுத்துள் எழுத்துகளை ஒலிக்கும்பொழுது அவை தோன்றும் இடம், ஒலிக்கும் முயற்சி, ஒலிக்கும் கால அளவு, உருவம் ஆகியவற்றில் ஒற்றுமையுள்ள எழுத்துகள் இன எழுத்துகள் எனப்பெறுகின்றன.

உயிரெழுத்துகளுள் – குற்றெழுத்து களும் அவற்றுக்குரிய முறையான நெட்டெழுத்துகளும் ஒன்றுக்கு ஒன்று இனமாகும்.

எ.டு. : அ – வுக்கு அ – வருவது சிறப்பு. இயலவில்லையானால், அ – வுக்கு ஆ, ஐ, ஔ வரலாம். இ – யுக்கு இ – அமைவது சிறப்பு. இயலவில்லையானால், இ – யுக்கு – ஈ, எ, ஏ இனமாக அமையலாம். உ – வுக்கு உ– அமைவது சிறப்பு. இயலாத நிலையில்

உ – வுக்கு ஊ, ஒ, ஓ இனமாக அமைக்கலாம். ஐ – க்கு ஐ – அமைவது சிறப்பு. இயலாத நிலையில் ஐ – க்கு அ, ஆ, ஔ இனமாக அமைக்கலாம். ஒ– வுக்கு ஒ – அமைதல் சிறப்பு. இயலாத நிலையில் ஒ – வுக்கு ஓ, உ, ஊ இனமாக அமையலாம்.

## உயிர்மெய் எழுத்துகள்

உயிரெழுத்துகளுக்கு அமைவதனைப் போலவே உயிர்மெய்யெழுத்துகளுக்கும் க – வுக்குக் க – அமைவதே சிறப்பு. இயலாத நிலையில் க – வுக்குக் கா, கை, கௌ இனமாக அமையலாம். கி – யுக்குக் கி – அமைவதே சிறப்பு. இயலாத நிலையில் கி – யுக்குக் கீ, கெ, கே இனமாக அமையலாம். கு – வுக்குக் கு – அமைவதே சிறப்பு. இயலாத நிலையில் – கு – வுக்குக் கூ, கொ, கோ இனமாக அமையலாம். கெ –வுக்குக் கெ – அமைவதே சிறப்பு. இயலாத நிலையில் – கெ – வுக்குக் கே, கி, கீ இனமாக அமையலாம். கைக்குக் கை – அமைவதே சிறப்பு. இயலாத நிலையில் – கை – க்குக் க, கா, கௌ இனமாக அமையலாம். இதனைப் போலவே சொல்லுக்கு முதலாக அமையும் எல்லா எழுத்துகளையும் பார்த்துக்கொள்ளவும்.

## விதி விலக்கு

ம – வுக்கு ம, மா, மை, மௌ என்பவற்றில் அமைக்க முடியவில்லையானால் ம – வுக்கு வ,வா,வை,வௌ என அமைத்துக்கொள்ளலாம். வ – வுக்கு வ, வா, வை என்பவற்றில் அமைக்க இயலவில்லையானால், வ – வுக்கு ம, மா, மை, மௌ என அமைத்துக்கொள்ளலாம். ச – வுக்குச் ச, சா, சை, சௌ அமைக்க முடியவில்லையானால் ச – வுக்குத் த, தா, தை, தௌ அமைத்துக்கொள்ளலாம். த – வுக்குத் த, தா, தை, தௌ அமைக்க முடியவில்லையானால் த – வுக்குச் ச, சா, சை, சௌ அமைத்துக்கொள்ளலாம். ஞ– வுக்கு ஞா, இயலாத நிலையில் ந, நா; ந – வுக்கு ஞ, இயலாத நிலையில் ஞ, ஞா அமைத்துக்கொள்ளலாம். அ – வுக்கும் ஆ – வுக்கும் யா அமையலாம். யா – வுக்கு அ, ஆ அமையலாம். இவ்வாறெல்லாம் அமைத்துச் செய்யுள் இயற்ற முடியவில்லையானால், வேறு பணியை நாடலாம்.

## திருக்குறளில் மோனைத் தொடை

### அ) அடிமோனை

அடிதொறும் முதலெழுத்து ஒன்றிவருதல் அடிமோனை எனப்பெறும். நான்கடி கொண்ட செய்யுளாக இருப்பின் நான்கு அடியிலும் முதலெழுத்து ஒன்றி வருதல் வேண்டும்.

"நாட்டை வளர்க்க நன்றாய் உழைப்போம்
நாட்டைக் காப்பதே நல்லோர் கடமை
நாட்டைப் பேணல் நன்மை நன்மை
நாட்டை வைத்தே நம்மை மதிப்பர்"
(வெற்றி.)

இச்செய்யுள் கலிவிருத்தம். இச் செய்யுளின் நான்கு அடியிலும் நா – என்னும் நெடில் முதல் சீரில் அமைந்துள்ளது. திருக்குறள் இரண்டு அடிகளைக் கொண்டது. திருவள்ளுவர் இரண்டு அடியிலும் எவ்வாறு முதல் எழுத்தினை அமைத்து மோனைத் தொடையினைப் பேணியுள்ளார் என்பது மிக மிக மகிழ்ச்சிதரக்கூடிய செய்தியாகும்.

துப்பார்க்குத் –
துப்பாய – (குறள்.12)

செயற்கரிய–
செயற்கரிய – (குறள். 26)

இல்லதென் –
இல்லவள் – (குறள். 53)

தம்பொருள் –
தம்தம் – (குறள்.63)

சொல்லுக –
சொல்லில் – (குறள்.200)

தீவினையார் –
தீவினை – ((குறள்.201)

தீயவை –
தீயினும் – (குறள். 202)

இலனென்று –
இலனாகும் – (குறள். 205)

இன்னாது –
இன்முகம் – (குறள். 224)

தோன்றின் –
தோன்றலின் – (குறள்.236)

சுடச்சுடரும் –
சுடச்சுட – (குறள். 267)

மனத்தது –
மறைந்தொழுகும் – (குறள். 278)

தன்னெஞ் –
தன்னெஞ்சே – (குறள். 293)

உள்ளத்தால் –
உள்ளத்துள் – (குறள்.294)

தன்னைத்தான் –
தன்னையே – (குறள். 305)
    உள்ளிய –
    உள்ளான் – (குறள். 309)
பிறர்க்கின்னா –
பிற்பகல் – (குறள்.319)
    நோயெல்லாம் –
    நோயின்மை – (குறள். 320)
அற்கா –
அற்குப – (குறள். 333)
    பற்றி –
    பற்றி – (குறள். 347)
பற்றுக –
பற்றுக – (குறள்.350
    சார்புணர்ந்து –
    சார்தரா – (குறள்.359)
வேண்டுங்கால் –
வேண்டாமை – (குறள்.362)
    அற்றவர் –
    அற்றாக – (குறள். 365)
நல்லவை–
நல்லவாம் – (குறள். 375)
    செல்வத்துள் –
    செல்வத்துள் – (குறள். 411)
அறிவுடையார் –
அஃதறி – (குறள். 427)
    அஞ்சுவது –
    அஞ்சல் – (குறள். 428)
சூழ்வார்கண் –
சூழ்வாரைச் – (குறள்.445)
    செய்தக்க –
    செய்யாமை – (குறள். 466)
எண்ணித் –
எண்ணுவம் – (குறள். 467)
    தேறற்க –
    தேறுக – (குறள். 509)
உள்ளியது –
உள்ளியது – (குறள்.540)

நாள்தொறும் –
நாள்தொறும் – (குறள். 553)
    மன்னர்க்கு –
    மன்னாவாம் – (குறள். 556)
கண்ணோட்டம் –
கண்ணோட்டம் – (குறள். 577)
    ஒற்றொற்றித் –
    ஒற்றினான் – (குறள். 588)
உடைய –
உடையது – (குறள். 591)
    இடும்பைக்கு –
    இடும்பை – (குறள்.623)
சொல்லுதல் –
சொல்லிய – (குறள். 664)
    தூங்குக –
    தூங்காது – (குறள்.672)
மன்னர் –
மன்னிய – (குறள். 682)
    அங்கணத்துள் –
    அல்லார்முன் – (குறள். 720)
கற்றாருள் –
கற்ற – (குறள். 722)
    நாடென்ப –
    நாட – (குறள். 739)
பொருளல் –
பொருளல்லது – (குறள்.751)
    அழிவி –
    அல்லல் – (குறள்.787)
தேறினும் –
தேறான் – (குறள். 876)
    பெண்ணேவல் –
    பெண்ணே – (குறள். 907)
குன்றின் –
குன்றி – (குறள்.965)
    பெருமை –
    பெருமிதம் – (குறள். 979)
நச்சுப் –
நச்சு – (குறள்.1008)

நாணால் –

நாண்துறவார் – (குறள். 1017)

இன்மையின் –

இன்மையே – (குறள்.1041)

இன்மை –

இம்மையும் – (குறள்.1042)

அச்சமே –

அவாவுண்டேல் – (குறள். 1075)

தாம்வீழ்வார் –

தாமரைக் – (குறள்.1103)

அனிச்சமும் –

அடிக்கு – (குறள்.1120)

யாம்கண்ணிற் –

யாம்பட்ட – (குறள்.1140)

இன்னாது –

இன்னாது – (குறள்.1158)

வீழப் –

வீழப் – (குறள். 1194)

காணுங்கால் –

காணேன் – (குறள்.1286)

யாரினும் –

யாரினும் – (குறள். 1314)

மேலே நாம் கண்டவை அடிமோனை

## ஆ) சீர்மோனை

சீர்மோனை – என்பது – சீரின் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது. சீர்மோனை என்பது – 1. இணை மோனை ; 2. பொழிப்பு மோனை ; 3. ஒரூஉ மோனை ; 4. கூழை மோனை ; 5. மேற்கதுவாய் மோனை ; 6. கீழ்க்கதுவாய் மோனை ; 7. முற்று மோனை என ஏழு வகைப்படும்.

### 1.இணை மோனை

இணை மோனை என்பது – நான்கு சீர்களைக் கொண்ட அடியில் முதற் சீரிலும் இரண்டாவது சீரிலும் மோனை அமைந்திருப்பதாகும். இணை – என்பது – அடுத்தடுத்து என்று பொருள்.

எ.டு.: அன்பினில் அலைகடல் தாயே என்பேன்

(வெற்றி)

### திருக்குறளில் இணைமோனை

திருவள்ளுவர் தமது திருக்குறளில் இணைமோனையினை எவ்வாறு கடைப்பிடித்துள்ளார், எத்தனை குறள்களில் கடைப்பிடித்துள்ளார் என்பதனைக் காண்போமாக.

கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் – (குறள். 15)

குணமென்னுங் குன்றேறி – (குறள். 28)

சிறப்பீனும் செல்வமும் – (குறள். 31)

மனத்துக்கண் மாசிலன் – (குறள்.34)

அழுக்காறு அவாவெகுளி – (குறள்.35)

துறந்தார்க்கும் துவ்வா – (குறள்.42)

பழியஞ்சிப் பாத்தூண் – (குறள்.44)

அன்பும் அறனும் – (குறள்.45)

மனைத்தக்க மாண்புடையள் – (குறள். 51)

இல்லதென் இல்லவள் – (குறள். 53)

பெண்ணிற் பெருந்தக்க – (குறள். 54)

அமிழ்தினும் ஆற்ற – (குறள். 64)

அன்புற்று அமர்ந்த – (குறள்.75)

இருந்தோம்பி இல்வாழ்வ – (குறள்.81)

பரிந்தோம்பிப் பற்றற்றேம் – (குறள்.88)

இன்சொலால் ஈரம் – (குறள்.91)

துன்புறூஉம் துவ்வாமை – (குறள்.94)

நயனீன்று நன்றி – (குறள்.97)

செய்யாமல் செய்த – (குறள்.101)

மறவற்க மாசற்றார் – (குறள்.106)

எழுமை எழுபிறப்பும் – (குறள்.107)

தக்கார் தகவிலர் – (குறள்.114)

செறிவறிந்து சீர்மை – (குறள்.123)

கதங்காத்துக் கற்றடங்கல் – (குறள்.130)

விளிந்தாரின் வேறல்லர் – (குறள்.143)

அறன்வரையான் அல்ல – (குறள்.150)

இன்மையுள் இன்மை –(குறள்.153)

நிறையுடைமை நீங்காமை – (குறள்.154)

ஒறுத்தாரை ஒன்றாக – (குறள்.155)

ஒறுத்தார்க்கு ஒருநாளை – (குறள்.156)

மிகுதியான் மிக்கவை – (குறள்.158)

துறந்தாரின் தூய்மை – (குறள்.159)

அழுக்காற்றின் அல்லவை – (குறள்.164)

அவ்வித்து அழுக்காறு – (குறள்.167)

நடுநின்று நன்பொருள் – (குறள்.171)
அருள்வெஃகி ஆற்றின்கண் – (குறள்.176)
அறங்கூறான் அல்ல – (குறள்.181)
அறனழீஇ அல்லவை – (குறள்.182)
புறங்கூறிப் பொய்த்துயிர் – (குறள். 183)
கண்நின்று கண்ணறச் – (குறள்.184)
அறநோக்கி ஆற்றுஞ்சொல் – (குறள்.189)
பயனில பல்லார்முன் – (குறள்.192)
நயன்சாரா நன்மையின் – (குறள்.194)
சீர்மை சிறப்பொடு – (குறள்.195)
பயனில்சொல் பாராட்டு – (குறள்.196)
பொருள்தீர்ந்த பொச்சாந்துஞ் – (குறள்.199)
நயனுடையான் நல்கூர்ந்தான் – (குறள்.219)
ஈத்துவக்கும் இன்பம் – (குறள்.228)
இரத்தலின் இன்னாது – (குறள்.229)
ஈதல் இசைப – (குறள்.231)
உரைப்பார் உரைப்பவை – (குறள்.232)
நிலவரை நீள்புகழ் – (குறள்.234)
வசையென்ப வையத்தார்க் – (குறள்.238)
வசையிலா வண்பயன் – (குறள்.239)
நல்லாற்றால் நாடி – (குறள்.242)
அல்லல் அருளாள்வார்க் – (குறள்.245)
பொருள்நீங்கிப் பொச்சாந்தார் – (குறள்.246)
அருளில்லார்க்(கு) அவ்வுலகம் –(குறள்.247)
பொருளற்றார் பூப்பர் – (குறள்.248)
பொருளாட்சி போற்றாதார்க் – (குறள்.252)
அவிசொரிந்(து) ஆயிரம் – (குறள்.259)
தவமும் தவமுடையார்க் – (குறள்.262)
துறந்தார்க்குத் துப்புரவு – (குறள்.263)
வேண்டிய வேண்டியாங்கு – (குறள்.265)
தவம்செய்வார் தம்கருமம் – (குறள்.266)
தன்னுயிர் தானறப் – (குறள்.268)
கூற்றம் குதித்தலும் – (குறள்.269)
வஞ்ச மனத்தான் – (குறள்.271)
மனத்தது மாசாக – (குறள்.278 )
உள்ளத்தால் உள்ளலும் – (குறள்.282 )
கள்ளத்தால் கள்வேம் – (குறள்.282)
களவென்னுங் காரறிவு – (குறள்.287)
தன்னெஞ்சே தன்னைச் – (குறள்.293)
மனத்தொடு வாய்மை – (குறள்.295)
பொய்யாமை பொய்யாமை – (குறள்.297)
சினமென்னுஞ் சேர்ந்தாரைக் – (குறள்.306)
இறந்தார் இறந்தார் –(குறள்.310)
சிறப்பீனுஞ் செல்வம் – (குறள்.311)
செய்யாமல் செற்றார்க்கும் – (குறள்.313)
அறிவினான் ஆகுவது – (குறள்.315)
இன்னா எனத்தான் – (குறள்.316)
எனைத்தானும் எஞ்ஞான்றும் – (குறள்.317)
நோயெல்லாம் நோய்செய்தார் – (குறள்.320)
அறவினை யாதுஎனின் – (குறள்.321)
பகுத்துண்டு பல்லுயிர் – (குறள்.322)
நிலையஞ்சி நீத்தாருள் – (குறள்.325)
யாதனின் யாதனின் – (குறள்.341)
அடல்வேண்டும் ஐந்தன் – (குறள்.343)
இருள்நீங்கி இன்பம் – (குறள்.352)
எப்பொருள் எத்தன்மைத்து – (குறள்.355)
பிறப்பென்னும் பேதைமை – (குறள்.358)
சார்புணர்ந்து சார்பு – (குறள்.359)
வேண்டுங்கால் வேண்டும் – (குறள்.362)
நுண்ணிய நூல்பல – (குறள்.373)
துறப்பார்மன் துப்புரவு – (குறள்.378)
நன்றாங்கால் நல்லவாக் – (குறள்.379)
அறனிழுக்கா(து) அல்லவை – (குறள்.384)
இயற்றலும் ஈட்டலும் – (குறள்.385)
இன்சொலால் ஈத்தளிக்க – (குறள்.387)
நுண்மாண் நுழைபுலன் – (குறள்.407)
பிழைத்துணர்ந்தும் பேதைமை – (குறள்.417)
காதல காதல் – (குறள்.440)
நிலத்தியல்பால் நீர்திரிந் – (குறள்.452)
மனத்தானாம் மாந்தர்க்கு – (குறள்.453)
மனநலம் மன்னுயிர்க்கு – (குறள்.457)
எள்ளாத எண்ணிச் – (குறள்.470)
ஆகா(று) அளவுஇட் – (குறள்.478)
கொக்கொக்க கூம்பும் – (குறள்.490)
முரண்சேர்ந்த மொய்ம்பி – (குறள்.492)
அஞ்சாமை அல்லால் – (குறள்.497)
சிறைநலஞ் சீரும் – (குறள்.499)
குடிப்பிறந்து குற்றத்தின் –(குறள்.502)
அரியகற்(று) ஆசற்றார் – (குறள்.503)
குணம்நாடிக் குற்றமும் – (குறள்.504)
காதன்மை கந்தா – (குறள்.507)
வினைக்கண் வினையுடையான் – (குறள்.519)
நாடொறு நாடுக – (குறள்.520)
பெருங்கொடையான் பேணான் – (குறள்.526)
தமராகித் தற்றுறந்தார் – (குறள்.529)
அரியவென்(று) ஆகாத – (குறள்.537)
புகழ்ந்தவை போற்றிச் –(குறள்.538)
ஓர்ந்துகண் ஓடாது – (குறள்.541)

வான்நோக்கி வாழும் – (குறள்.542)
குடிதழீஇக் கோலோச்சும் – (குறள்.544)
வேலன்று வென்றி – (குறள்.546)
கொலையிற் கொடியாரை – (குறள்.550)
நாடொறு நாடி – (குறள். 553)
மன்னர்க்கு மன்னுதல் – (குறள்.556)
இன்மையின் இன்னாது – (குறள்.558)
கடுஞ்சொல்லன் கண்ணிலன் – (குறள்.566)
கடுமொழியும் கையிகந்த – (குறள்.567)
இனத்தாற்றி எண்ணாத – (குறள்.568)
பண்ணென்னாம் பாடற்கு – (குறள்.573)
ஒற்றும் உரைசான்ற – (குறள்.581)
ஒற்றினான் ஒற்றி – (குறள்.583)
உரமொருவற்(கு) உள்ள – (குறள்.600)
குடியென்னுங் குன்றா – (குறள்.601)
மடியை மடியா – (குறள்.602)
குடிமடிந்து குற்றம் – (குறள்.604)
படியுடையார் பற்றமைந்தக் – (குறள்.606)
இடிபுரிந்(து) எள்ளுஞ்சொல் – (குறள்.607)
மடியிலா மன்னவன் – (குறள்.610)
அற்றேமென்(று) அல்லற் – (குறள்.626)
இன்பத்துள் இன்பம் – (குறள்.629)
கருவியுங் காலமும் – (குறள்.631)
அறனறிந்(து) ஆன்றமைந்த –(குறள்.635)
அறிகொன்(று) அறியான் – (குறள்.638)
சொல்லுக சொல்லைப் – (குறள்.645)
எற்றென்(று) இரங்குவ – (குறள்.655)
கடிந்த கடிந்தொரார் – (குறள்.658)
கலங்காது கண்ட – (குறள்.665)
எனைத்திட்பம் எய்தியக் – (குறள்.670)
வினையால் வினையாக்கிக் – (குறள்.678)
நட்டார்க்கு நல்ல – (குறள்.679)
உறைசிறியார் உள்நடுங்கல் – (குறள்.680)
அன்புடைமை ஆன்ற – (குறள்.681)
அன்பறி(வு) ஆராய்ந்த – (குறள்.682)
நூலாருள் நூல்வல்லான் – (குறள்.683)
அறிவுரு ஆராய்ந்த – (குறள்.684)
தொகச்சொல்லித் தூவாத – (குறள்.685)
அகலா(து) அணுகாது – (குறள்.691)
செவிச்சொல்லும் சேர்ந்த – (குறள்.694)
குறிப்பிற் குறிப்புணர் – (குறள்.703)
முகத்தின் முதுக்குறைந்தது – (குறள்.707)
அவையறிந்(து) ஆராய்ந்து – (குறள்.711)
ஒளியார்முன் ஒள்ளியர் – (குறள்.714)
உணர்வ(து) உடையார்முன் – (குறள்.718)
புல்லவையுள் பொச்சாந்தும் – (குறள்.719)
கற்றார்முன் கற்ற – (குறள்.724)
வாளொடென் வன்கண்ணர் – (குறள்.726)
பெரும்பொருளால் பெட்டக்க – (குறள்.732)
உறுபசியும் ஓவாப் – (குறள்.734)
கேடறியாக் கெட்ட – (குறள்.736)
முற்றியும் முற்றா – (குறள்.747)
முற்றாற்றி முற்றி – (குறள்.748)
பொருளென்னும் பொய்யா – (குறள்.753)
அருளொடும் அன்பொடும் – (குறள்.755)
அருளென்னும் அன்பீன் – (குறள்.757)
உறுப்பமைந்(து) ஊறஞ்சா – (குறள்.761)
உலைவிடத்(து) ஊறஞ்சா – (குறள்.762)
அறிவின்(று) அறைபோகா – (குறள்.764)
மறமான மாண்ட – (குறள்.766)
அடற்றகையும் ஆற்றலும் – (குறள்.768)
சிறுமையும் செல்லாத் – (குறள்.769)
கய்வேல் களிற்றொடு – (குறள்.774)
விழித்தகண் வேல்கொண்– (குறள்.775)
இழைத்த(து) இகவாமைச் – (குறள்.779)
நிறைநீர நீரவர் –(குறள்.782)
அழச்சொல்லி அல்லது – (குறள்.795)
உள்ளற்க உள்ளம் – (குறள்.798)
மருவுக மாசற்றார் – (குறள்.800)
விழைதகையான் வேண்டி – (குறள்.804)
விழையார் விழையப் –(குறள்.810)
பேதை பெருங்கெழீஇ – (குறள்.816)
இனம்போன்(று) இனமல்லார் – (குறள்.822)
நட்டார்போல் நல்லவை – (குறள்.826)
ஓதி உணர்ந்தும் – (குறள்.834)
உலகத்தார் உண்டென்ப – (குறள்.850)
பகல்கருதிப் பற்றா – (குறள்.852)

இகலென்னும் எவ்வநோய் – (குறள்.853)
மிகல்மேவல் மெய்ப்பொருள் – (குறள்.857)
இகலிற்(கு) எதிர்சாய்தல் – (குறள்.858)
அன்பிலன் ஆன்ற – (குறள்.862)
வழிநோக்கான் வாய்ப்பன – (குறள்.865)
கொடுத்துங் கொளல்வேண்டும் – (குறள்.867)
குணனிலனாய்க் குற்றம் – (குறள்.868)
செறுவார்க்குச் சேணிகவா – (குறள்.869)
பகையென்னும் பண்பி – (குறள்.871)
தேறினுந் தேறா – (குறள்.876)
நோவற்க நொந்த – (குறள்.877)
உயிர்ப்ப உளரல்லர் – (குறள்.880)
உறன்முறையான் உட்பகை – (குறள்.885)
ஒன்றாமை ஒன்றியார் –(குறள்.886)
ஆற்றுவார் ஆற்றல் –(குறள்.891)
கெடல்வேண்டின் கேளாது – (குறள்.893)
யாண்டுச்சென்(று) யாண்டும் – (குறள்.895)
மனைவிழைவார் மாண்பயன் – (குறள்.901)
அறவினையும் ஆன்ற – (குறள்.909)
பொருட்பெண்டிர் பொய்ம்மை – (குறள்.913)
பொதுநலத்தார் புன்னலம் – (குறள்.915)
நாணென்னு நல்லாள் –(குறள்.924)
உள்ளொற்றி உள்ளூர் – (குறள். 927)
உருளாயம் ஓவாது – (குறள்.933)
அகடாரார் அல்லல் – (குறள்.936)
உடைசெல்வம் ஊணொளி – (குறள்.939)
அற்ற(து) அறிந்து – (குறள்.944)
நலத்தின்கண் நாரின்மை – (குறள்.958)
நலம்வேண்டின் நாணுடைமை – (குறள்.960)
புகழின்றால் புத்தேள்நாட் – (குறள்.966)
ஒளியொருவற்(கு) உள்ள – (குறள்.971)
பெருமை பெருமிதம் – (குறள்.979)
சான்றவர் சான்றாண்மை – (குறள்.990)
அன்புடைமை ஆன்ற –(குறள்.992)
நயனொடு நன்றி –(குறள்.994)
பண்புடையார் பட்டுண் –(குறள்.996)
எச்சமென்(று) என்எண்ணுங் – (குறள்.1004)
அற்றார்க்கொன்(று) ஆற்றாதான் – (குறள்.1007)

குலம்சுடுங் கொள்கை – (குறள்.1019)
உழுவார் உலகத்தார்க்– (குறள்.1032)
இரக்க இரத்தக்கார்க் – (குறள்.1051)
இரத்தலும் ஈதலே – (குறள்.1054)
இகழ்ந்தெள்ளா(து) ஈவாரைக் – (குறள்.1057)
அறைபறை அன்னர் – (குறள்.1076)
உடுப்பதூஉம் உண்பதூஉம் – (குறள்.1079)
அணங்குகொல் ஆய்மயில் – (குறள்.1081)
நோக்கினாள் நோக்கெதிர் – (குறள்.1082)
கொடும்புருவம் கோடா – (குறள்.1086)
கடாஅக் களிற்றின் – (குறள்.1087)
இருநோக்(கு) இவள்உண்கண் – (குறள்.1091)
நோக்கினாள் நோக்கி – (குறள்.1093)
கண்ணொடு கண்ணிணை – (குறள்.1100)
உறுதோ(று) உயிர்தளிர்ப்பத் – (குறள்.1106)
ஊடல் உணர்தல் – (குறள்.1109)
அறிதோ(று) அறியாமை – (குறள்.1110)
மலர்காணின் மையாத்தி – (குறள்.1112)
மதியும் மடந்தை – (குறள்.1116)
அனிச்சமும் அன்னத்தின் – (குறள்.1120)
உடம்போ(டு) உயிரிடை – (குறள்.1122)
கண்ணுள்ளார் காத – (குறள்.1127)
உவந்துறைவர் உள்ளத்துள் – (குறள்.1130)
நாணொடு நல்லாண்மை – (குறள்.1133)
காமக் கடும்புனல் – (குறள்.1134)
கடலன்ன காமம் – (குறள்.1137)
அலரெழ ஆருயிர் – (குறள்.1141)
உறாஅதோ ஊரறிந்த – (குறள்.1143)
களித்தொறுங் கள்ளுண்டல் – (குறள்.1145)
இன்னா(து) இனனில்லூர் – (குறள்.1158)
அரிதாற்றி அல்லல்நோய் – (குறள்.1160)
காமக் கடல்மன்னும் – (குறள்.1164)
காமக் கடும்புனல் – (குறள்.1167)
கொடியார் கொடுமையின் – (குறள்.1169)
உள்ளம்போன்(று) உள்வழிச் – (குறள்.1170)
கண்தாம் கலுழ்வ – (குறள்.1171)
படலாற்றா பைதல் – (குறள்.1175)
உழந்துழந்(து) உண்நீர் – (குறள்.1177)

பேணாது பெட்டார் – (குறள்.1178)

நயந்தவர்க்கு நல்காமை – (குறள்.1181)

பசக்கமன் பட்டாங்குஎன் – (குறள்.1189)

தாம்வீழ்வார் தாம்வீழப் – (குறள்.1191)

வாழ்வார்க்கு வானம் – (குறள்.1192)

வீழுநர் வீழப் – (குறள்.1193)

பருவரலும் பைதலும் – (குறள்.1197)

நசைஇயார் நல்கார் – (குறள்.1199)

எனைத்தொன்(று) இனிதேகாண் – (குறள்.1202)

நனவினால் நல்கா – (குறள்.1213)

நனவினால் நல்காக் – (குறள்.1217)

துஞ்சுங்கால் தோள்மேலர் – (குறள்.1218)

நனவினால் நல்காரை – (குறள்.1219)

நனவினால் நம்நீத்தார் – (குறள்.1220)

பனியரும்பிப் பைதல்கொள் – (குறள்.1223)

பதிமருண்டு பைதல் – (குறள்.1229)

நயந்தவர் நல்காமை – (குறள்.1232)

தணந்தமை சால – (குறள்.1233)

பணைநீங்கிப் பைந்தொடி – (குறள்.1234)

கொடியார் கொடுமை – (குறள்.1235)

தொடியொடு தோள்நெகிழ – (குறள்.1236)

இருந்துள்ளி என்பரிதல் – (குறள்.1243)

துன்னாத் துறந்தாரை – (குறள்.1250)

காமக் கணிச்சி – (குறள்.1251)

செற்றார்பின் செல்லாப் – (குறள்.1255)

இலங்கிழாய் இன்று – (குறள்.1262)

உரனசைஇ உள்ளம் – (குறள்.1263)

புலப்பேன்கொல் புல்லுவேன் – (குறள்.1267)

பெறினென்னாம் பெற்றக்கால் – 1270)

கரப்பினுங் கையிகந்(து) – (குறள்.1271)

செறிதொடி செய்திறந்த – (குறள்.1275)

பெரிதாற்றிப் பெட்பக் – (குறள்.1276)

பெண்ணினால் பெண்மை – (குறள்.1280)

பேணாது பெட்பவே – (குறள்.1283)

காணுங்கால் காணேன் – (குறள்.1286)

இனித்தக்க இன்னா – (குறள்.1288)

அவர்நெஞ்(சு) அவர்க்காதல் – (குறள்.1291)

தஞ்சம் தமரல்லர் – (குறள்.1300)

அலந்தாரை அல்லல்நோய் – (குறள்.1303)

நலத்தகை நல்லவர்க் – (குறள்.1305)

ஊடலின் உண்டாங்கோர் – (குறள்.1307)

நீரும் நிழலது – (குறள்.1309)

ஊடல் உணங்க – (குறள்.1310)

புலத்தலின் புத்தேள்நாடு – (குறள்.1323)

உணலினும் உண்டது – (குறள்.1326)

தொடரும்...



இன்று (24.3.2024) தமிழ்நாடு அரசின் சார்பில், அண்ணா சதுக்கம் வளாகத்தில் அமைந்துள்ள கவிச்சக்கரவர்த்தி கம்பர் அவர்களின் திருவுருவச் சிலைக்கு அருகில் அலங்கரித்து வைக்கப்பட்டுள்ள திருவுருவப்படத்திற்கு, தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை செயலாளர் முனைவர் இல. சுப்பிரமணியன் இ.ஆ.ப., செந்தமிழ் சொற்பிறப்பியல் அகர முதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநர் திருமதி க.பவானி, உலக தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநர் (பொறுப்பு) திரு.கோபி, தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் முனைவர் நா.அருள் மற்றும் துறை அலுவலர்கள் மலர் தூவி மரியாதை செலுத்தினார்கள்.

# பகுப்புற்ற தமிழ்த் துமியும், இரியும் டிவைசும் (device) ஒரு சிறு கண்ணோட்டம்


## திரு. இரா. திருமாவளவன்

தேசியத் தலைவர், மலேசியத் தமிழ்நெறிக் கழகம்

மலேசியா




இரண்டு

அர்> அரி = அரித்தல் , வெட்டடல், நீக்கல்

அர்> இர்

இர்>இரி= வெட்டடல், நீக்கல், பிரித்தல்

இர்>இரு = ஒன்றாக இருந்தது வெட்டப்பட்டால் பிரியும். பிரிந்தது ஒன்று, ஒன்று எனப் பிரிதல் பொருளில் இரு என்றானது.

இர்>இரு>இரண்டு

இரண்டு> ரெண்டு( தெலுங்கு)

எரடு ( கன்னடம்)

ரண்டு ( மலையாளம்)

உல்>துளைத்தல் கருத்து வேர்

உல்>துல்> துள்>துளை

துளைக்கப் பட்டது பிளக்கும்; பிரியும்

உல்>துல்>தும்>துமி = பிளவு,

துமித்தல் = பிளத்தல், வெட்டடல்

துமி அதே பிளத்தல் பொருள் மாறாமல் tome என இலத்தின் மொழியில் வழங்குகின்றது.

Tome comes from Latin tomus, which comes from Greek tomos, meaning "section" or "roll of papyrus." Tomos comes from the Greek verb temnein, which means "to cut." In ancient times, some of the longest scrolls of papyrus occasionally were divided into sections. When it was first used in English in the 16th century, tome was a book that was a part of a multi-volume work. Now a tome is most often simply a large and often ponderous book.

Tome, tomos, temnein எனத் துமி வெட்டடல், பிளவு, பிரிவுப் பொருளில் வழங்குவதைக் காணலாம்.

from Greek tmesis "a cutting," related to temnein "to cut," tome "a cutting" (from PIE root *tem- "to cut"). The separation of the elements of a compound word by the interposition of another word or words (such as a whole nother)

என இணையத்தள ஆங்கில வேர்ச்சொல் அகரமுதலி காட்டுகின்றது.

உல்>துல்>தும்>துமி

இச்சொல் வடமொழியில் திரிந்து துவி என்றானது.

துல்>தும்>துமி>துவி

பிளக்கப்பட்டது இரண்டாகுகின்றமையால் துவி இரண்டு எனும் பொருளைத் தந்தது.

துமி> துவி

துமம்> துவம்> த்வ

த்வ> த்வம்( சமற்.)

த்வ> த்வி> துவி (சமற்.)

துவி வடமொழித் திரிபாதலால் துவிச்சக்கர வண்டியைத் தமிழறிஞர் பெருமக்கள் ஈருருளி எனத் தமிழில் மாற்றினர்.

Dva ( த்வ) du, of dva, dvi ( Sanskrit)

Dva> dua ( மலாய்)

Two > டூ எனப் பலுக்கப் பெற்றாலும் அது த்வோ என்றே அமைந்துள்ளது..

பெண்டெமிக் Pandemic எனுஞ் சொல் pan demic எனும் இருசொற்களின் கலவையாகும். இச்சொல்லில் இணைந்துள்ள pan என்பதும் demic என்பதும் தமிழின் திரிபாகவே அமைந்துள்ளன. Demic துமியின் விளைவாய் அமைவதை ஆய்வின் வழி உணரலாம்.

உல்> புல் > பல்> பல்கல்= பெருகல், விரிதல்.

உல்> புல்= சேர்தல், திரளல் கருத்து வேராகும்.

சேர்வதால் திரட்சி பெற்ற பொருள் பருக்கும்; விரியும். பல்கல் பன்மையும் ஆகும். மேலை இந்தோ ஐரோப்பிய மொழிகளில் தமிழின் பல்கல் பலவாய்ப் பல்கியது. பல்> மகரத்தின் முன் பன் ஆகும். பன்மை, பன்மம். பன்மி எனப் பன்மச் சொற்கள் பல்குவன.

Pan + demic=== எனும் சொல் இருசொற்களின் கூட்டே. பல்கிப் பரவல் பொருளில் அமைந்த pan என்பதோடு demic எனுஞ் சொல்லுஞ் சேர்ந்துள்ளது. Demic > துணிப்புப் பொருளைத் தரும் தமிழின் துமி எனுஞ் சொல்லிலிருந்து ஆக்கம் பெற்றது. உல் > சேர்தல் பொருளை மட்டுமல்ல துளைத்தல், துருவல் பொருளையும் தருவதாகும். துளைக்கப்படுவதே பிளக்கப்படும். ஒன்று பிளக்கப் பட்டால் இரண்டாகும். இதனால் துல்> தும் > துமி > துவி > துவா என வடமொழியில் இரண்டைக் குறித்தது. மேலை மொழிகளுக்கும் இச்சொல் பரவித் திரிந்தது. ( உல்>துல்>தும்>துமி= துமித்தல், வெட்டல், பிளத்தல் . )

பல்கியதே பாரியதாகி அனைத்துமாய் விளங்கும். மொத்தமாய் எனத் தமிழில் நாம் சொல்வதுபோல் பல்கியதை அனைத்தும் எனும் பொருளில் மேலை மொழியில் pan என்றனர். பிளந்து இருமையாகி மேலும் மேலும் பிளந்து பிரியும். இதனால் பிரிந்து பிரிந்து திரட்சி பெற்ற மக்களை demo என்றனர். பொது எனவும் இது பொருள் தரும். பொதுவும் திரட்சிப் பொருளைத் தருவதே. பிளத்தலால் தனித்தன, சேர்தலால் திரண்டன. Demo முழுக்க முழுக்க தமிழின் துமி தந்த விளைவே.

From Ancient Greek πάνδημος (pándēmos, “of or belonging to all the people, public”) + English -ic (suffix forming adjectives from nouns with the sense ‘of or pertaining to’). πάνδημος is derived from παν- (pan-, prefix meaning ‘all, every’) (ultimately from Proto-Indo-European *peh₂- (“to protect, shepherd”)) + δῆμος (dêmos, “the common people; free citizens, sovereign people”) (ultimately from Proto-Indo-European *deh₂- (“to divide, share”)). Compare Late Latin pandēmus (“affecting all the people, general, public”).[1]

பல்கிப் பெருகிய மக்களிடத்து பல்கிப் பெருகித் தொற்றிய பெருந்தொற்றே, பெரும்பிணியே பெண்டமிக் Pandemic ஆகும்.

ஆங்கிலத்தில் di இரண்டைக் குறித்த முன்னொட்டு பின்னர் bi எனத் திரிந்து பொருள் கெடாமல் இருமையையே குறித்தது.

di>bi

di>bi> binary

di>bi>bicycle

இந்தோ ஐரோப்பிய மொழியில் ,

From Middle English two, twa, from Old English twā, neuter of twēġen (whence twain), from Proto-Germanic *twai, from Proto-Indo-European *dwóh₁.

Cognate with Scots twa ("two"); North Frisian tou, tuu ("two"); Saterland Frisian twain, two ("two"); West Frisian twa ("two"); Dutch twee ("two"); Low German twee, twei ("two"); German zwei, zwo ("two"); Danish and Norwegian to ("two"); Swedish tva, tu ("two"); Icelandic tvo ("two"); Latin duō ("two"); Ancient Greek δύο (dúo, "two"); Irish dha ("two"); Lithuanian dù ("two"); Russian два (dva, "two"); Albanian dy ("two"); Old Armenian երկու (erku, "two"); Sanskrit (dva, "two"); Tocharian A wu, Tocharian B wi. See also twain.> இவை அனைத்தும் தமிழ் இரண்டின் திரிபுகளே.

இரண்டாகப் பிரிவுற்றது, பகுக்கப்பட்டது எனும் பொருளில் இந்தோ ஐரோப்பிய மொழிகளில் மேலும் திரிந்து வகைப்பாட்டுப் பொருளைத் தருதலாயிற்று....

உல்>துல்> தும்> துமம் > துவம்> த்வ( துவ) > த்வி ( துவி) > dva > dvi > divi> division ( separate)

பிளத்தல், பகுத்தல் பொருளில் இருமையாகிப் பின்னர் பல்வகைப் பகுப்பாகவும் துமி விரிந்தது. ஆங்கில device எனுஞ் சொல்லுக்குத் தமிழின் துமியே மூலமாகும்.

Device >>>>

From Old French devis, from Latin divisus, past participle of dividere ("to divide"), thus originally, when goods were being divided among people, a mark put on each item to say who was getting what.

1. பகுத்துப் பகுத்து நுண்ணியவாறு ஆய்ந்தறிதல்

2. பகுத்து, பிரிக்கப்பட்ட பொருட் பாகங்கள்... மக்கள், தொகுதிகள்

3. பகுத்தாய்ந்து திட்டமிடல்

4. பகுத்து வடிவமைப்பு செய்தல்

என இதன் பொருள் அமையும்.

device (n.)

c. 1300, devis, "intent, desire; an expressed intent or desire; a plan or design; a literary composition," from Old French devis "division, separation; disposition, wish, desire; coat of arms, emblem; a bequest in a will, act of bequeathing," from deviser "arrange, plan, contrive," literally "dispose in portions," from Vulgar Latin *divisare, frequentative of Latin dividere "to divide" (see divide (v.)).

தமிழ் இரண்டால் division, divides எனும் பகுப்புச் சொற்கள் ஆங்கிலத்தில் பலவகையில் கிளைப்புற்றன...

Divide தரும் பொருள் நுட்பங்களை ஆங்கிலத்தில் காண்க...பல்வகை அகரமுதலிகளில் இவ்வாறு தரப்பட்டுள்ளன.

1. n Divide A dividing ridge of land between the tributaries of two streams; also called watershed and

water parting. A divide on either side of which the waters drain into two different oceans is called a continental divide. கண்டப் பாகி

2. Divide To be separated; to part; to open; to go asunder. "The Indo–Germanic family divides into three groups." வகைப்பாடு

3. Divide To break friendship; to fall out. பகை

4. Divide To cause separation; to disunite. "A gulf, a strait, the sea intervening between islands, divide less than the matted forest." தீர்வு, விலகு

5. Divide To cause to be separate; to keep apart by a partition, or by an imaginary line or limit; as, a wall divides two houses; a stream divides the towns. "Let it divide the waters from the waters." வரம்பு / பகுப்பு

6. Divide To disunite in opinion or interest; to make discordant or hostile; to set at variance. "If a kingdom be divided against itself, that kingdom can not stand." "Every family became now divided within itself." பிளவு

7. Divide To have a share; to partake. பகிர்வு

8. Divide To make partition of among a number; to apportion, as profits of stock among proprietors; to give in shares; to distribute; to mete out; to share. "True justice unto people to divide ." பாகம் /,பங்கு "Ye shall divide the land by lot."

9. Divide (Mech) To mark divisions on; to graduate; as, to divide a sextant. பகுதி

10. Divide To part asunder (a whole); to sever into two or more parts or pieces; to sunder; to separate into parts. "Divide the living child in two." பிரிப்பு

11. Divide (Music) To play or sing in a florid style, or with variations. வகை

12. Divide (Logic) To separate into species; –– said of a genus or generic term. வகுப்பு

13. Divide To separate into two parts, in order to ascertain the votes for and against a measure; as, to divide a legislative house upon a question. பகுப்பு

14. Divide (Math) To subject to arithmetical division. வகுத்தல்

15. Divide To vote, as in the British Parliament, by the members separating themselves into two parties (as on opposite sides of the hall or in opposite lobbies), that is, the ayes dividing from the noes. "The emperors sat, voted, and divided with their equals. பிரிவு

Century Dictionary and Cyclopedia

. தமிழில் இரண்டானது பகுக்கப்பட்டதானது. பகுக்கப்பட்டது இரண்டானது.

உல்> துளைத்தல் கருத்து வேர்

உல்>புல்

உல்>புல்>பொல்> பொழு>பொகு= துளை

பொகுத்தல்= துளைத்தல்

பொகு> பொக்கு = துளை

பொக்கு>பொக்கை= துளை

பொக்கைப் பல்= துளையுள்ள பல்

பொகு>பகு= துளைத்தலால் பிளத்தல்

பகு> பகுதல்= பிளவு படுதல்

பகு>பகுத்தல் = பங்கிடுதல்

பகு> வகு > வகுத்தல்

பகு>பகை= ஒன்றாய் இருந்தவர் பிளவுபட்டு எதிராதல்,

பகைவர்= எதிரியானவர்

பகு>பகுதி = பிளவுற்ற பிரிவு

பகு>பகுதி>பாதி= ஒன்றில் பிளவுற்ற சரிபகுதி

பகு>பாகு > பாகுபடுதல்= பிளவுற்று வேறுபடுதல்

பகு>பாகு>பாகம் = பிரிவுற்ற பகுதி, நூல்களின் பிரிவு, சொத்துப் பிரிப்பு ( பாகப்பிரிவினை )

பகு>பக்கு = பிரிவுற்ற , பகுதியான சிதறல், புண்ணைக் காக்கும் தனித்த காய்ந்த தோல்,

பக்கு வடை = உடைந்த வடை

பகு>பக்கம் = பிரிவற்ற ஒன்றின் பகுதி, நிலவின் பகுதி, நூல்களின் ஏட்டுப் பிரிவு

பகு>பக்கல் = நிலவின் பகுதி ( தேதி)

பகு> பங்கு = பிரிக்கப் பட்ட கூறு

பகு>பங்கு > பங்காளி = பங்கு பெற உரித்தானவர்

ஆங்கிலத்தை நுட்பமாய் ஆய்கின்ற பொழுது அதன் தாய்மொழிகளுக்கெல்லாம் தாயாய் நம் தாய்த்தமிழே விளங்குவதை உணரலாம்.

இக்கருத்து, சிலருக்கு ஏற்காமல் போகலாம் ஆனால் அதுவே மெய்ம்மையாகும்...

# கஞ்சி

முனைவர் ஆ. அரிமாப் பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி



"மாடா உழைச்சவன் வாழ்க்கையிலே– பசி

வந்திடக்காரணம் என்ன மச்சான்– அவன்

தேடிய செல்வங்கள் வேறு இடத்திலே

சேர்வதினால் வரும் தொல்லையடி!

பஞ்ச பரம்பரை வாழ்வதற்கே – இனி

பண்ண வேண்டியது என்ன மச்சான்– தினம் கஞ்சி கஞ்சி என்றால்

பானை நிறையாது

சிந்திச்சு முன்னேற வேணுமடி!"

(பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், நாடோடி மன்னன்)

*********

ஐ= நுண்மை

ஐ – கை = நுண்மை, சிறிய.

(கைக்கடியாரம், கைப்பை, கைவிளக்கு, கைப்பிள்ளை, கைக்குட்டை, கைக்கிளை, கைம்மை, கைம்பெண்).

கைஞ்சி – கஞ்சி = சிறிய அரிசி அல்லது நொய்யினால் சமைக்கப்படுவது.

நுள் – நுண்மை; நுள் – நுய் – நொய்.

ஒ. நோ. : நை – நைந்து – நைஞ்சு – நஞ்சு.

துணி நஞ்சிப்போச்சு என்ற வழக்கும் உண்டு.

உண்டால் மாந்தனை நையவைப்பது நஞ்சு.

"புலிப்பொறிப் போர்க் கதவின்

திருத் துஞ்சும் திண் காப்பின்

புகழ் நிலைஇய மொழி வளர

அறம் நிலைஇய அகன் அட்டில்

சோறு வாக்கிய கொழும் கஞ்சி

யாறு போலப் பரந்து ஒழுகி

ஏறு பொரச் சேறு ஆகி

தேர் ஓடத் துகள் கெழுமி

நீறு ஆடிய களிறு போல

வேறுபட்ட வினை ஓவத்து

வெண் கோயில் மாசு ஊட்டும்"

(பட்டினப்பாலை: 40–50).

உரை:

புலிச் சின்னத்தையுடைய தம்மில் நன்கு இணைக்கப்பட்ட கதவுகளையுடைய, செல்வம் தங்கும் திண்மையான மதிலை உடையவாக, புகழ் நிலைபெற்ற சொற்கள் பரவ, அறம் நிலைபெற்ற, பெரிய சமையல் அறைகளில் சோற்றிலிருந்து வடித்த கொழுமையான கஞ்சி, ஆற்றினைப் போலப் பரந்து தெருவில் ஓடி, அவ்விடத்தில் காளைகள் போரிடுவதால் சேறு ஆகிற்று. தேர் ஓடிக் கிளப்பிய தூசியில் விளையாடிய ஆண் யானையைப் போன்று, வேறுபட்ட தொழில்களையுடைய ஓவியம் வரையப்பட்ட வெள்ளை நிறமுடைய அரண்மனையில் தூசி படிந்தது.

கஞ்சி ஊற்றுதல் – சாகை ஊற்றுதல் – கூழ்

ஊற்றுதல் – கூழ் வார்த்தல்.

"ஆடி மாதத்தில் கோயில்களில் அம்மன் வழிபாடு, வேப்பிலை, மஞ்சள், சாகை வார்த்தல் மற்றும் கூழ் ஊற்றுதல் என மக்கள் பக்தி விழாக்களை நடத்தி வருகின்றனர்." – எனச் செய்திகள் அவ்வப்போது வரும்.

கஞ்சி = கூழ்.

"ஒன்று அமர் உடுக்கை கூழ் ஆர் இடையன்

கன்று அமர் நிரையொடு கானத்து அல்கி"

(பெரும்பாணாற்றுப்படை: 175–176).

பொருள்:

ஒன்றாய்ப் பொருந்தின உடையினை உடைய, கூழை உண்ணுகிற இடைமகன் கன்றுகளை விரும்பும் ஆனிரைகளோடே காட்டில் தங்கி,..

கூழ் = உணவு. குழைய இருப்பதால் கூழ்!

"தைஇத் திங்கள் தண் கயம் போலக்

கொளக்கொளக் குறைபடாக் கூழ் உடை வியன் நகர்"

(புறநானூறு 70: 6–7).

பொருள்:

தை மாதத்துக் குளிர்ந்த தடாகம் போன்று எடுக்க எடுக்கக் குறையாத உணவினையுடைய பெரிய நகர்.

"கொள்ளும் ஆறும் தன் கோரகையுள் கஞ்சி

மொள்ளும் ஆறும் முதுகு நெளித்து உண்டு ஊன்"

(நீலகேசி 3, 237: 1–2).

"முழுத்தோல் போர்க்கும் புத்தப்பேய்

மூளைக் கூழை நாக்குழறக்

கழுத்தே கிட்ட மணந்திரியாக்

கஞ்சி யாக வாரீரே."

(கலிங்கத்துப் பரணி 567).

பொருள்:

முழுத் தோலைப் போர்த்திக்கொண்டிருக்கும் புத்தப்பேய்க்கு மூளையைக் கஞ்சியாக்கிக் கூழை (பின்) நாக்கு மணக்கும்படி வாருங்கள்.

"அஞ்சி அல்லல் மொழிந்து திரிவார் அமண் ஆதர்

கஞ்சி காலை உண்பார்க்கு அரியான் கலி காழி

தஞ்சம் ஆய தலைவன் தன்னை நினைவார்கள்

துஞ்சல் இல்லா நல்ல உலகம் பெறுவாரே!"

(ஞானசம்பந்தர், தேவாரம் 2111).

"தெருவில் திரி சிறு நோன்பியர் செம் சோற்றொடு கஞ்சி

மருவி பிரிந்தவர் வாய்மொழி மதியாது வந்து அடைவீர்

திருவில் பொலி மறையோர் சிறுபுலியூர் சலசயனத்து

உருவ குறள் அடிகள் அடி உணர்–மின் உணர்வீரே!"

(நாலாயிரத் தெய்வப் பனுவல் 1629).

"நெஞ்சு பொறுக்குதில்லையே –இந்த

நிலைகெட்ட மனிதரை நினைந்துவிட்டால்

கஞ்சி குடிப்பதற்கிலார் –அதன்

காரணங்கள் இவையென்னும் அறிவுமிலார்

பஞ்சமோ பஞ்சமென்றே –நிதம்

பரிதவித் தே உயிர் துடிதுடித்து

துஞ்சி மடிகின்றாரே –இவர்

துயர்களைத் தீர்க்கவோர் வழியிலையே (நெஞ்சு)"

(பாரதியார்).

"மஞ்சம் திருத்தி – உடை

மாற்றி யணிந்தே – கொஞ்சம்

கொஞ்சிக் குலாவிட நாதன் வரும்படி

கோதை அழைக்கையிலே,

மிஞ்சிய சோகம்–மித

மிஞ்சிய அச்சம்–'என்

வஞ்சியும் பிள்ளையும் நானிறந்தால் என்ன

வாதனை கொள்வாரோ'

நெஞ்சிலிவ் வாறு – நினைந்

தங்குரைக் கின்றான்: –அடி

பஞ்சைப் பரம்பரை நாமடி பிள்ளைகள்

பற்பலர் ஏதுக் கென்பான்.

கஞ்சி பறித்தார் – எழுந்

காதல் பறித்தார் – கெட்ட

வஞ்சகம் சேர்சின்ன மானிடச்சாதிக்கு

வாய்ந்த நிலை இதுவோ!"

(பாரதிதாசன் கவிதைகள், தொகுதி 1 – மக்கள் நிலை, மனிதர்).

சில வேளைகளில் நாட்டில் உணவுப் பற்றாக்குறை காரணமாக மக்கள் துன்புறும் போது அரசும், கொடையுள்ளம் படைத்தோரும் கஞ்சித் தொட்டி திறந்து மக்களுக்கு உணவளிக்கும் முறை உள்ளது.

பகடி செய்வதைக் 'கஞ்சி காய்ச்சிட்டான்' என்பர்.

கஞ்சி குடித்தது கழுக்காணி, கூழ் குடித்தது குந்தாணி'
'கஞ்சி குடித்தாலும் கடன் இல்லாமல் குடிக்க வேணும்'

'கஞ்சித் தண்ணீருக்குக் காற்றாய்ப் பறக்கிறான்' – என்பன போன்ற பழமொழிகளும் உள்ளன.

கன்னடம், தெலுங்கு, மலையாளம் ஆகிய மொழிகளில் கஞ்சி என்ற சொல்லே வழங்குகிறது.

சங்கக் காலம் முதல் இன்று வரை இலக்கியத்திலும் மக்களிடத்திலும் புழங்கிவரும் கஞ்சி எனும் தமிழ்ச் சொல்லை ஆங்கிலரும் பிறரும் எடுத்தாள்வது பெருமை தானே!

சீனப் பயணி பிளினியின் பயணக்குறிப்பில் குறிப்பிடப்பட்டுள்ளது எனக் கூறப்படுகிறது.

The English word congee is derived from the Tamil word kanji (கஞ்சி, kañci, IPA: [ˈkaɲdʑi]). In Chinese, it is known as zhou (Chinese: -; pinyin: zhōu; Cantonese Yale: jūk). It is mentioned in the Book of Rites and noted in Pliny's account of India circa 77 CE.

Congee or conjee (/ˈkɒndʒiː/ KON–jee) is a type of rice porridge or gruel eaten in Asian countries. It can be eaten plain, where it is typically served with side dishes, or it can be served with ingredients such as meat, fish, seasonings and flavourings, most often savory, but sometimes sweet. It is typically served as a meal on its own, especially for breakfast or people who are ill. Names for congee are as varied as the style of its preparation, but all are made with rice cooked as a softened porridge with a larger quantity of water than other types of cooked rice like pilaf or claypot rice.

........................

# இலக்கண வகைச்சொல்




**முனைவர் இரா.கு.ஆல்துரை**

மேனாள் பதிப்பாசிரியர்,
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்


### சொல்வகை

சொல்லில் இணைப்பு வகை, தொடரியல் நெறிகள் ஆகியன சொல்வகையைச் (parts of speech) சார்ந்து இருப்பதால் மரபிலக்கணத்தார் சொல்வகையை இன்றியமையாததாகக் கருதிவந்துள்ளனர். தமிழ் இலக்கணநூலார் சொற்களைப் பெயர், வினை, இடை, உரி என நான்கு வகைகளாகப் பிரிப்பர். இவற்றுள் இடைச்சொல், உரிச்சொல் ஆகிய இரண்டிற்கும் தெளிவான வரையறை சொல்லப்படவில்லை. சமற்கிருதம் சொற்களை நாம (பெயர்), ஆக்யாத்த (வினை), உபசர்க (முன்னொட்டு), நிபாத்த (இடைச்சொல்) என நான்காகப் பகுக்கிறது.

இக்கால இலக்கணத்தார் இடைச்சொல்லுக்கென்று தனிப்பொருள் (lexical meaning) இல்லை என்றும் அது இலக்கணப்பொருளுடனே (grammatical meaning) சொற்றொடரில் இடம்பெறுகிறது என்றும் இடைச்சொல் தன் பொருளை உணர்த்த பிறிதொரு சொல்லைச் சார்ந்து இருக்கும் தன்மையது என்றும் விளக்கம் தருகின்றனர்.

### மூவகை

பேச அல்லது எழுதப் பயன்படும் பொருளுடைய மொழியின் அலகு சொல். சொல் பேசும்பொழுது ஒலிவடிவத்துடனும் எழுதும்பொழுது வரி வடிவத்துடனும் இருக்கும். இவ்விரு வடிவங்களிலும் அது பொருள் உணர்த்துவதுவதாக இருக்க வேண்டும். பொருள் உணர்த்தும் ஓரெழுத்து அல்லது பலவெழுத்துகளால் ஆனதாகச் சொல் இருக்கும். இதனைச் "சொல்லாவது எழுத்தோடு ஒரு புடையான் ஒற்றுமை யுடைத்தாய்ப் பொருள் குறித்து வருவது" எனச் சேனாவரையர் குறிப்பிடுவார். சொல் என்று பொதுப்படையாகக் குறிப்பது அடிப்படையில் வினைச்சொல், பெயர்ச்சொல், இடைச்சொல் என்னும் மூன்றுவகைச் சொற்களையும் உள்ளடக்குகிறது. மொழிலுள்ள சொற்கள் அனைத்தையும் வினை, பெயர், இடை என்ற மூன்றுபிரிவுகளாகப்பிரித்துக்விளக்குகின்றனர். "முதற்காலத்தில் இலக்கண வகைச்சொல் பெயர், வினை, இடை என மூன்றாகவே இருந்தன. இதுவே எல்லாமொழிகட்கும் பொதுவான அறிவியன் முறைப்பாடாகும்" (பாவாணர் 1990:156). இம்மூவகைச் சொற்களுள்

எழுவாயாக, செயப்படுபொருளாக வேற்றுமையுருபு, பன்மை ஈறு முதலிய வற்றையும் பெயரடையையும் ஏற்க வல்லதாகச் செயல்படுவது பெயர். பொதுவாகப் பெயர் ஆள், இடம், பொருள், நிலை, பண்பு ஆகியவற்றைச் சுட்டுவதாக இருக்கும். பெயர் இன்னொரு பெயருக்கு அடையாகவும் வரும். பெயர், ஒன்றுக்கும் மேற்பட்ட சொற்களுடன் சேர்ந்து கூட்டுப் பெயர்ச்சொல்லாகவும் வரும். வினையாலணையும் பெயரைத் தவிர பிற பெயர்ச்சொற்களில் காலம் காட்டும் இடைநிலைகள் வருவதில்லை.

வினை செயல், நிகழ்ச்சி, இருக்கும் நிலை ஆகியவற்றைச் சுட்டுவதாக இருக்கும். வினை காலம் காட்டும் இடைநிலைகளை ஏற்க வல்லது; வினை வேற்றுமை உருபுகளை ஏற்காது; என்பன போன்ற வரையறையுடன் பெயர் வினை ஆகிய சொற்களை இனம் கண்டு விளக்கி விடலாம். இவ்விருவகைச் சொற்களும் முழுச்சொற்களாக இருப்பதால் இடைச்சொற்களுக்குச் சொற்பிறப்பு, வரலாறு முதலியவற்றைச் சொல்வதைக் காட்டிலும் இவற்றிற்குச் எளிமையாகச் சொல்லி விடலாம்.

### இடைச்சொல்

"பெரும்பாலும் தமித்துவராது, பெயருக்கும் வினைக்கும் உறுப்பாக அவற்றினிடத்து வரும் சொற்கள் இடைச்சொல்லாம். இடை இடம். சிறுபான்மை தமித்தும் வருவதால், தமித்து வருவன சொல்லிடத்து என வருவன இடைச்சொற்கள் இருபாற்படும். தமித்து வருவனவும், இயற்கை யிடைச்சொல்லும் செயற்கையிடைச்சொல்லும் ஆக இரு திறப்படும். இடைச்சொல்லாகவே தோன்றியவை இயற்கை; பெயரும் வினையும் பல்வேறு பொருளுணர்த்தி இடைச்சொல்லாகத் திரிந்தவை செயற்கை" (பாவாணர் 1990:216).

இற்றை மொழியியலார் தனித்து வழங்கும் ஆற்றலுடையதைத் தனியுருபன் (free morpheme/free form) என்றும் தனித்து வழங்கும் ஆற்றலில்லாது வேறொரு சொல்லோடு இணைந்து வருவதைக்

கட்டுருபன் (bound morpheme/form) என்றும் குறிப்பிடுவர். அவ்வகையில் பல இடைச்சொற்கள் கட்டுருபன் என்னும் தகுதியோடு மொழியில் இருக்கின்றன. இக்கால இலக்கணத்தார் இடைச்சொல்லைத் தனியான சொல் வகைப்பாடாகக் கொள்கின்றனர். சில மொழிகளில் இடைச் சொற்கள் பெருமளவில் பயன்பாட்டில் இருக்கின்றன என்றும் சில மொழிகளில் இடைச்சொற்கள் மிகக் குறைந்த அளவில் பயன்பாட்டில் இருக்கின்றன என்றும் குறிப்பிடுவர்.

சொற்கள் உருவம் (expression), பொருள் (content) ஆகிய இரண்டு தன்மைகளைக் கொண்டிருக்கின்றன. இதனைச் சொன்மை, பொருண்மை எனத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. இடைச்சொல்லுக்குச் சொன்மை உண்டு. பொருண்மையில் அதற்குத் தனிப் பொருள் இல்லை. என்றாலும் அது இலக்கணப்பொருளுடன் இயங்குவதால் அவ்விலக்கணப் பொருளை இயல்பான பொருள்போலவே கொள்ளலாம்.

### தோற்றமுறை

"இலக்கண வகைச்சொல் மூன்றும் இயல்பாகத் தோன்றிய முறை, பொதுவாக நோக்கின் இடை, வினை, பெயர் என்பதாகும்..... உணர்ச்சி யொலிகளும் விளி யொலிகளும் குறிப்பொலிகளும், மாந்தன் வாயில் முந்தித் தோன்றியவையாகும். இவை இடைச்சொல் என்பது தெளிவு.... சில இடைச்சொற்கள் வினையாகிப் பின்பு பெயராகின்றன.... இடை – வினை – பெயர் என்னும் இம்முறை எல்லாச் சொற்களுக்கும் தனிப்பட்ட நிலையில் ஒத்ததன்று. சில இடைச் சொற்கள் நேரடியாகப் பெயராகிவிடுகின்றன" (பாவாணர் 1990:157). பெரும்பாலும் இடை, வினை, பெயர் என்னும் ஒழுங்கில் சொற்கள் ஆக்கம் பெறுகின்றன. ஆகையால் சொல்லாய்வில் இடைச்சொல் இன்றியமையாத இடம் பெறுகிறது.

### உருபு

"தமிழியக் குடும்ப மொழிகளின் இலக்கணங்களை ஆராய்ந்து பார்த்தால், அம்மொழிகளில் வேற்றுமைப்பொருள்கள் அனைத்தும், பின்னிணைவுகள் அல்லது பின்னொட்டுகளால் உணர்த்தப்படுகின்றன. பெரும்பாலான பின்னிணைவுகள், உண்மையில் தனியான சொற்களே. அனைத்துத் தமிழியக் குடும்ப மொழிகளிலும் அவ்வேற்றுமை யுருபுகள் பழங்காலத்தில் தாம் கொண்டிருந்த பெயர்ச்சொல்லுக்குத் துணையாகும் தனித்தன்மையைக் காட்டும் தடயங்களை இன்றும் தக்க வைத்துள்ளன. பல வேற்றுமையுருபுகள், குறிப்பாகப் பண்பட்ட மொழிகளில் அவை தனியாக இயங்கும் தன்மையை இழந்துள்ளன. இப்பொழுது அவை வேற்றுமை யுருபுகள் எனக்கொள்ளத் தக்கவையாக இருக்கின்றன. என்றாலும், மூலத்தில் அவை அனைத்தும் பின்னிணைவுப் பெயர்களாக இருந்துள்ளன என்பதில் ஐயம் கொள்வதற்கு முகாந்தரம் ஏதுமில்லை" (கால்டுவெல் 1987:255). இவ்வகை உருபுகள் பாவாணர் பிரிப்பு நோக்கில் இயற்கை இடைச்சொற்கள் அன்று. இவை பெயரும் வினையும் பல்வேறு பொருளுணர்த்தி இடைச்சொல்லாகத் திரிந்த செயற்கை வகையைச் சார்ந்தவை.

### உரிச்சொல்

தமிழ் இலக்கணம் சொற்களைப் பெயர், வினை, இடை, உரி என்று நான்காகப் பிரித்துள்ளது. உரிச்சொல் பெரும்பான்மை செய்யுளுக்கு உரியதாக வருவது எனக் குறிப்பாரும் உண்டு. உரிச்சொல் என்பது இலக்கண வகைச் சொல்லன்று. அது ஆரியர்க்கு விளங்குமாறு பொருள் கூறப்பட்ட சொற்களும் சொல்வடிவுகளுமாகிய அருஞ்சொற்றொகுதி (பாவாணர் 1990:277). தொல்காப்பியம் சொற்களைப் பெயர், வினை, இடை, உரி என்று நான்கு வகைகளாகப் பிரித்து விளக்கினாலும் உரிச்சொல்லுக்குத் தனி இலக்கண வகைத் தன்மை இல்லை.. தொல்காப்பியம் உரியியலில் உரிச் சொற்களுக்கு அகரமுதலி முறையில் பொருள் கூறிச் செல்கிறது. உரிச்சொற்கள் 120 க்கு உரியியலில் விளக்கம் கொடுத்தி ருக்கிறார் தொல்காப்பியர். தொல்காப்பிய உரியியல் சொல்லின் வேர் மூலங்களைக் காட்டுகிறது என்று கருதுவோரும் உளர். உரிச்சொல் என்ற இயலே சொல்லாராய்ச்சி யினின்றுதான் தோன்றியிருக்க வேண்டும் எனக் குறிப்பிடுவாரும் உண்டு. ஆனால் உரியியலில் தொல்காப்பியர் காலத்தில் வழக்கில் அருகி வழங்கப்பட்ட சொற்களுக்கு வழக்கில் உள்ள சொற்களைக் கொண்டு விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது. இது பொருள் விளங்காச் சொற்களுக்கு எளிய சொல்லைத் தருதல் என்ற கோட்பாட்டுக்கு நிகரானது. பாவாணர் உரிச்சொல் என்பது இலக்கணவகைச் சொல்லன்று. செய்யுளிலுள்ள அருஞ்சொற் பொருளுணர்த்தும் சொற்களஞ்சியம் போல் அது தொடங்கியுள்ளது எனக்குறிப்பது பொருத்தமாகப்படுகிறது. இதற்கு எடுத்துக் காட்டாகத் தொல்காப்பியத்தின் உரியியலைப் போன்று பிற்காலத்தில் எழுந்த நிகண்டுகள் சொல்லுக்குப் பொருள் கூறும் தன்மையனவாக இருப்பதைக் காணலாம்.

## பொருள்

"எல்லாச் சொல்லும் பொருள் குறித்தன" என்ற நூற்பாவில் உரையாசிரியர்கள் தனிமொழி பொருள் குறிப்பது பற்றியும் தொடர்மொழி பொருள் குறிப்பது பற்றியும் விளக்கும் கருத்து சொற்பொருளியல் நோக்கில் சிறப்பு வாய்ந்தது "அசைநிலை முதலாயினவும் பொருள் குறித்து நிற்கும் என ஐயம் அறுத்தற்கு இச்சூத்திரம் வேண்டும்" என்று சேனாவையர் மியா, மோ போன்ற அசைநிலைகளும் தனிமொழியில் பொருள் குறிக்கும் என்று திட்ட வட்டமாகக் கூறியுள்ளார்.

"தாஞ்சார்ந்த சொற்களின் பொருளை உணர்த்தியும் அச்சொற்களை அசைத்து நிற்றலின் அசை நிறையும் பொருள் குறித்தனவேயாம். சொற்கள் ஓசை நிறைந்து நின்றே பொருள் உணர்த்த வேண்டுதலின் இசை நிறையும் பொருள் உணர்த்திற் றேயாம்" என்று நச்சினார்க்கினியர் இடைச் சொற்களாக அசை நிறையும் இசை நிறையும் பொருள் குறிப்பது பற்றிக் குறிப்பிடுவார்.

## இடைச்சொல்வகை

இடைச்சொற்களைத் தமித்து வருவன, சொல்லிடத்து வருவன என்று இரண்டாகப் பிரிக்கும் பாவாணர் தமித்துவருவனவற்றைச் சுட்டிடைச்சொற்கள் (எ–டு: அந்தா, அதோ, அன்னா), வினாவிடைச்சொற்கள் (எ–டு: எந்தா, எதோ, எதா), உவம வுருபுகள் (எ–டு: அன்னன், ஆங்க, போல், நிகர்), உடன்பாட்டிடைச் சொற்கள் (எ–டு: சரி, சரிசரி, ஆகட்டும்), ஒத்துக்கோளிடைச் சொற்கள் (எ–டு: ஆம், நல்லது), ஆவலாதி யிடைச்சொற்கள் (எ–டு: பார்த்தையா), அரற்ற விடைச்சொற்கள் (எ–டு: குய்யோ முறையோ), வேசாற்றிடைச் சொற்கள் (எ–டு: அக்கடா, சிவசிவா), விளி யிடைச்சொற்கள் (எ–டு: இந்தா, ஏ, ஓய்), உரைமுக இடைச்சொற்கள் (எ–டு: அந்த, இந்த), விழுக்காட்டிடைச் சொற்கள் என்பனபோன்று பிரித்துப் பலவாறாக விளக்குகிறார் பாவாணர். அதே போல் சொல்லிடத்து வருவனவற்றிற்கு முன்னொட்டுகள், வரிசை யிடைச்சொற்கள், இணைப்பிடைச் சொற்கள், பல்பொரு ளடைச்சொற்கள், பல்வகை இலக்கண வீறுகள், பண்புப் பெயரீறுகள், தொழிற்பெயரீறுகள், வினையாலணையும் பெயரீறுகள் என்பன போன்று வருவன வற்றைக் குறிப்பிடுவார் பாவாணர் (1990: 216–244). இவ்விருவகையுள் சொல்லிடத்து வருவன பெரும்பாலும் கட்டுருபன்களாக இருப்பதால் அவை முன்னர் தனிச்சொற்களாக இருந்தன எனக்கொள்ள இடமுண்டு. ஆகையால் இடைச்சொற்களுள் தமித்து வருவன சிறப்பிடம் பெருகின்றன. இவை காலத்தால் மிகவும் பழைமையானவை.

## அடிப்படை

சொற்களைச் சில வகைப்பாடுகளாகப் பிரித்து விளக்கும் முறை எல்லா மொழிகளிலும் உண்டு. ஆங்கிலத்தில் எண்வகைச் சொல்வகைப்பாட்டைக் குறிக்கின்றனர். அங்குச் சொல்வகைப்பாடு பத்தாக இருக்கிறது எனக் குறிப்பாரும் உண்டு. இவ்வகைப் பாட்டிற்குப் பொருளை அடிப்படியாகக் கொண்டுள்ளனர். இவ்வகைப்பாடு அம்மொழிச் சொற்களை வகைப்படுத்துவதற்கு முழுமை யாகப் பொருந்தி வரவில்லை எனக் குறிப்பிடுகின்றனர் (கிளிசன் 1974:93). தமிழிலக்கணங்கள் நான்கு வகைச் சொல் வகைப்பாட்டைக் குறிப்பிட்டாலும் பெயர், வினை ஆகிய இரண்டை அடிப்படையான சொல்வகைகளாகவும் இடைச்சொல்லையும் உரிச்சொல்லையும் பெயர், வினை ஆகியவற்றிற்கு அடுத்த நிலையினவாகவும் கொண்டுள்ளன. சொல் வகைப்பாட்டிற்குத் தமிழ் இலக்கணம் பெயர், வினை ஆகிய இரண்டிற்கும் இலக்கண வாய்ப்பாட்டை (para–digmatic class) அடிப்படையாகக் கொண்டுள்ளது என்றும் பெயரையும் வினையையும் சார்ந்து வந்து இலக்கணப்பொருள் (grammatical meaning) உணர்த்துபவை இடைச்சொற்கள் என்றும் குறிப்பிடலாம் என்கின்றனர் (பரமசிவம் 1991:104). உரிச்சொல் இடைச்சொல்லைப் போலில்லாமல் தனிப்பொருள் (lexical meaning) உணர்த்துவது அதைப் பெயர், வினை ஆகியவற்றோடு இணைத்துப் பார்க்க இடம் தருகிறது. அவ்வகையிலும் அதனைத் தனியான சொல்வகையாகக் கொள்ள இடமில்லை. ஆகையால் தமிழ்ச் சொற்களைப் பெயர், வினை, இடை என்னும் மூவகைப்பாடுகளாகக் கொள்வது பொருத்த முடையது.

## குறிப்புதவி நூல்கள்


1.) தொல்காப்பியம், சேனாவரையருரை

2.) பரமசிவம், கு., 1991, இக்காலத்தமிழ் மரபு, கழகம், சென்னை

3.) பாவாணர் (ஞா.தேவநேயப் பாவாணர்) 1990, தமிழ் வரலாறு, கழகம் (முதற்பதிப்பு 1967)

4.) Caldwell, Robert, 1987, A Comparative Grammar of the Dravidian or South Indian Family of Languages, AES, New Delhi (first published 1913)

5.) Gleason, H.A., 1974, An Introduction to Descrip–tive Linguistics, Oxford &IBH Publishing Co., New Delhi (first published 1955)

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் ஐம்பெரும் விழா! மாண்புமிகு தமிழ்வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அமைச்சர் திரு. மு.பெ. சாமிநாதன் அவர்கள் அகரமுதலி இயக்கக விருதுகளை வழங்கிச் சிறப்பித்தார்!

சென்னை – தரமணியில் அமைந்துள்ள உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் 07.03.2024 ஆம் நாள் "ஐம்பெரும் விழா" நடைபெற்றது.

தமிழ்நாடு அரசு, தமிழ்வளர்ச்சித் துறை சார்பில் நடைபெறும் இந்த ஐம்பெரும் விழாவில், தமிழ்வளர்ச்சித் துறை இயக்குநர் முனைவர் ஔவை. ந. அருள் அவர்கள் பங்கேற்று வரவேற்புரையும், தமிழ்வளர்ச்சி மற்றும் செய்தித்துறையின் அரசு செயலாளர் முனைவர் இல. சுப்பிரமணியன் இ.ஆ.ப., தஞ்சாவூர் – தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் முனைவர் வி. திருவள்ளுவன் ஆகியோர் வாழ்த்துரையும் வழங்கினார்கள்.

ஐம்பெரும் விழாவில் மாண்புமிகு தமிழ்வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அமைச்சர் திரு. மு.பெ. சாமிநாதன் அவர்கள் கலந்துகொண்டு, தமிழ்நாடு அரசு அகரமுதலி இயக்ககம் வழியாக வழங்கிடும் 2023 ஆம் ஆண்டுக்கான தேவநேயப் பாவாணர் விருது, வீரமாமுனிவர் விருது, நற்றமிழ்ப் பாவலர் விருது, தூயதமிழ்ப் பற்றாளர் விருது ஆகிய விருதுகளைத் தம் பொற்கைகளால் வழங்கி விழாப் பேருரை நிகழ்த்தினார்கள்.

## விழாவில் விருதுபெற்றோர் விவரங்கள்

2023ஆம் ஆண்டிற்கான தேவநேயப் பாவாணர் விருதுக்குத் தெரிவு செய்யப்பெற்ற விருதாளர் திரு. ப. அருளி அவர்களுக்குப் பொன்னாடை அணிவித்து விருதுத் தொகை ரூ.2,00,000/–, ஒரு சவரன் தங்கப்பதக்கம் மற்றும் தகுதியுரை வழங்கிச் சிறப்பிக்கப்பட்டது.

2023ஆம் ஆண்டிற்கான வீரமாமுனிவர் விருதுக்குத் தெரிவு செய்யப்பெற்ற விருதாளர் முனைவர் ச. சச்சிதானந்தம் அவர்களுக்குப் பொன்னாடை அணிவித்து விருதுத் தொகை ரூ.2,00,000/–, ஒரு சவரன் தங்கப்பதக்கம் மற்றும் தகுதியுரை வழங்கிச் சிறப்பிக்கப்பட்டது.

2023ஆம் ஆண்டிற்கான நற்றமிழ்ப் பாவலர் விருதுக்கு மரபுக்கவிதை வகைப்பாட்டில் தெரிவு செய்யப்பெற்ற திரு. அரிமாப் பாமகன் அவர்களுக்கும், புதுக்கவிதை வகைப்பாட்டில் தெரிவு செய்யப்பெற்ற திரு. கௌதமன் நீல்ராசு அவர்களுக்கும் பொன்னாடை அணிவித்து விருதுத்தொகை ரூ.50,000/– மற்றும் ரூ.25,000/– மதிப்பிலான தங்கப் பதக்கம், கேடயம், தகுதியுரை ஆகியவை வழங்கிச் சிறப்பிக்கப்பெற்றது.

2023ஆம் ஆண்டிற்கான தூயதமிழ்ப் பற்றாளர் விருது 21 பேருக்கு வழங்கப்பட்டது. தூயதமிழ்ப் பற்றாளர் ஒவ்வொருவருக்கும் விருதுத்தொகை ரூ.20,000/–, பாராட்டுச் சான்றிதழ் (ம) பொன்னாடை அணிவித்துச் சிறப்புச் செய்யப்பெற்றது.

2023ஆம் ஆண்டிற்கான தூயதமிழ்ப் பற்றாளர் விருது பெற்றோர்

| | | |
|---|---|---|
| செல்வி ப. பவித்ரா | – | அரியலூர் |
| திரு. நந்திவரம் பா. சம்பத்குமார் | – | செங்கல்பட்டு |
| திரு. பி. தமிழழகன் | – | சென்னை |
| திரு. நா. நாகராஜ் | – | தருமபுரி |
| செல்வன் செ. மோகனபூபதி | – | திண்டுக்கல் |
| திரு. சிவசங்கரன் | – | ஈரோடு |
| திரு. ந. ஸ்டாலின் | – | கரூர் |
| செல்வன் ச. ஜாஹீர் உசேன் | – | மதுரை |
| திரு. ம. அ. சையத் அசன் (எ) பாரிதாசன் | – | இராணிப்பேட்டை |
| செல்வி கு. சுமித்ரா | – | சிவகங்கை |
| திரு. ச. பெத்தையா | – | தஞ்சாவூர் |
| திரு. ப. பாண்டியராசன் | – | தேனி |
| செல்வன் சா. செல்வகுமார் | – | திருப்பத்தூர் |
| தமிழ்ச்செம்மல் முத்து. சுப்பிரமணியன் | – | திருப்பூர் |
| முனைவர் ப. இராசசேகர் | – | திருவள்ளூர் |
| செல்வி அ. அபிபெல்வியா | – | திருவண்ணாமலை |
| செல்வன் தே. தன்ராஜ் | – | திருச்சிராப்பள்ளி |
| திரு. த. இராம்குமார் | – | தூத்துக்குடி |
| முனைவர் பா. சம்பத்குமார் | – | வேலூர் |
| செல்வன் ஐ. தமிழன் | – | விழுப்புரம் |
| செல்வன் க. சதீஸ்குமார் | – | விருதுநகர் |

# அகரமுதலி இயக்கக விருதுகள்–2023

2023

## தேவநேயப் பாவாணர் விருது



திரு. ப. அருளி

2023

## வீரமாமுனிவர் விருது



முனைவர் ச. சச்சிதானந்தம்

2023

## நற்றமிழ்ப் பாவலர் விருது (மரபுக்கவிதை)



முனைவர் ஆ. அரிமாப் பாமகன்

2023

## நற்றமிழ்ப் பாவலர் விருது (புதுக்கவிதை)



திரு. கௌதமன் நீல்ராசு

# அகரமுதலி இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 153 ஆவது கூட்டம்! 314 சொற்கள் ஏற்பு!




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 153–ஆவது கூட்டம் 08.03.2024 ஆம் நாள் நடைபெற்றது.

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவரும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு, தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின் 'தமிழ்க் கலைக்கழகம்' செயற்பட்டுவருகிறது. மக்களின் பேச்சுவழக்கிலும், ஊடகங்களிலும் காணப்படும் பிறமொழிக் கலைச்சொற்கள் இவ்வியக்ககப் பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர் மற்றும் தொகுப்பாளர்களால் தொகுக்கப்பட்டு, அவற்றிற்கிணையான தமிழ்க் கலைச்சொற்கள் வடிவமைக்கப்படுகின்றன. அச்சொற்கள் திங்கள் இருமுறை நடைபெறும் தமிழ்க் கலைக்கழகக் கூட்டங்களில் சீராக்கம் செய்யப்பட்டு சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்படுகின்றன.

அந்தவகையில் அகரமுதலி இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 153–ஆவது கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு. பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. நா.சு. சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், முனைவர் ஆ.அரிமாப்பாமகன், நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் ஆகியோர் பங்கேற்றனர். இக்கூட்டத்தில் 314 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

# அகரமுதலி இயக்கக இயக்குநர் திருமதி க. பவானி அவர்கள் தலைமையில் தமிழ்க் கலைக்கழகத்தின் 154 ஆவது கூட்டம்!

## 226 சொற்கள் ஏற்பு!




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 154–ஆவது கூட்டம் 12.03.2024 ஆம் நாள் நடைபெற்றது.

அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி. க. பவானி அவர்கள் தலைமையில் நடைபெற்ற தமிழ்க் கலைக்கழகத்தின் 154–ஆவது கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு. பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் ஆகியோர் பங்கேற்றனர். இக்கூட்டத்தில் 226 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

### ஏற்பளிக்கப்பெற்ற கலைச்சொற்களுள் சில :

| | | |
|---|---|---|
| Anthrobot | – | மாந்தப்பொறி |
| Blanket ballot | – | ஒற்றை ஒப்போலை |
| Blanket consent | – | பொது இசைவு |
| Buyback agreement | – | மீள்பெறுகை ஒப்பந்தம் |
| Caledonian antisyzygy | – | முரண் ஒன்றிப்பு |
| Carbon bomb | – | கரிமக் குண்டு |
| Gigatonne | – | நூறுகோடிக் கல்லெடை |
| Climate mobility | – | காலநிலை இடப்பெயர்வு |
| diphylleids | – | அழியாப் பயிரி |
| Coolcation | – | கோடை உலாவிடம் |
| Cover story | – | முதன்மைக் கட்டுரை |
| Coverage insurance | – | காப்பீட்டு அடங்கல் |
| Covert activity | – | கமுக்க வினை |
| Crash Diet | – | கட்டுப்பாட்டு உணவு |
| Designation act | – | தீர்வு முடக்கு ஆணை |
| Dockless bike | – | மெலி மிதிவண்டி |
| Ecotarian | – | இயற்கை உணவர் |
| Emerging market | – | வளர் சந்தை |
| Garbage time | – | இறுதி ஆட்ட நேரம் |
| Giant cactus | – | நெடுங்கள்ளி |